# ஆண்டாள்

## (நாச்சியார் திருமொழி)

பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி
தமிழ்த்துறை, இலயோலா கல்லூரி
சென்னை
donstony@loyolacollege.edu
9944911404



# அறிமுகம் –
# படிப்பதனால் உண்டாகும் பயன்

- வேயர் குலத்தில் புகழ் மிக்க திருவில்லிபுத்தூர் தலைவரான பெரியாழ்வாரின் மகள் கோதை,
- தான் கண்ணனைத் திருமணம் செய்து கொண்டதாகக் கண்ட கனவை,
- தூய தமிழ் மாலையாக அருளினாள்.
- இந்தப் பத்துப் பாசுரங்களையும் பயில வல்லவர்கள்,
- நல்ல குணங்களுடைய குழந்தைகளைப் பெறுவர்.
- கன்னியர் கண்ணனைப் போன்ற கணவனைப் பெற்று மகிழ்வர்.



# பாசுரம் – 1 - வருகை

- கல்யாண குணங்கள் நிறைந்த ஸ்ரீமந்நாராயணன்,
- ஆயிரம் யானைகள் புடைசூழ, ஊர்வலமாக வருவதால்,
- நகர் முழுவதும் பொன்மயமான பூரண கும்பங்கள் வைத்து,
- தோரணங்கள் கட்டியிருப்பதாக
- நான் கனவு கண்டேன் தோழியே!



# பாசுரம் – 2 - நிச்சயதார்த்தம்

- நாளைக்குத் திருமணமுகூர்த்தம் என்று நிச்சயித்து,
- கமுகம் பாளை முதலியவைகளுடன் அலங்காரம் செய்யப்பட்ட பந்தலில்,
- சிங்கம் போன்ற நடையுடன்,
- திருமகள் கேள்வனாகிய கோவிந்தன் என்னும் ஓர் காளை புகுவதை
- நான் கனவு கண்டேன் தோழி!

முனைவர் த. டான் ஸ்டோனி



# பாசுரம் – 3 - புடவை அளித்தல்

- இந்திரன் உள்ளிட்ட தேவர்கள் கூட்டம் இங்கே வந்து,
- என்னை திருமணப் பெண்ணாக நிச்சயம் பேச,
- பெண் வீட்டாரும் பிள்ளை வீட்டாரும் கலந்து பேசி,
- பின் தனித் தனியே சென்று பேசி முடிவு செய்து,
- வேத மந்திரங்கள் ஓதித் தூய்மையாக்கிய கூறைப் புடவையைக் கொடுத்து என்னை உடுத்தச் செய்து,
- துர்க்கையான நாத்தனார் மணம் மிகுந்த மாலையை எனக்குச் சூட்டுவதாக
- நான் கனவு கண்டேன் தோழி!



# பாசுரம் – 4 –

## மந்திரம் ஓதுதல் – காப்புக் கட்டுதல்

- வைதிகச் சடங்குகளில் வல்ல நல்ல அந்தணர்கள் பலரும்
- நான்கு திசைகளில் இருந்து புண்ணிய தீர்த்தங்களைக் கொண்டு வந்து தெளித்து,
- உயர்ந்த குரலில் மணமக்களுக்கு மங்களா சாசனம் செய்ய,
- பூக்களைச் சூடிய புனிதனான அந்தக் கண்ணனுடன் என்னைச் சேர்த்து வைத்து,
- கங்கணக் காப்பு கட்டுவதாக
- நான் கனவு கண்டேன் தோழி!



நாற்றிசை தீர்த்தம் கொணர்ந்து நனிநல்கி
பார்ப்பனச் சிட்டர்கள் பல்லாரெடுத் தேத்தி
பூப்புனை கண்ணிப் புனிதனோ டென்தன்னை
காப்புநாண் கட்டக் கனாக்கண்டேன் தோழிநான்

# பாசுரம் – 5 –
# உள்ளே வருதல்

- பருவத்தாலும் வடிவத்தாலும் அழகு மிகுந்த இளம்பெண்கள்,
- சூரிய ஒளி போன்ற மங்கள விளக்கையும் பொற்கலசங்களையும் தங்கள் கைகளில் தாங்கியவர்களாக எதிர் கொண்டு அழைக்க,
- மதுரை மன்னன் கண்ணன் பாதுகைகளை அணிந்தவராக
- பூமி அதிர கம்பீரமாக நடந்து வந்து,
- உள்ளே புகுவதை நான் கனவு கண்டேன் தோழி!

## வாரணமாயிரம் - 5



கதிரொளி தீபம் கலசமுட னேந்தி
சதிரிள மங்கையர் தாம்வந்தெதிர்கொள்ள
மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டெங்கும்
அதிரப் புகுதக் கனாக்கண்டேன் தோழிநான் !

# பாசுரம் – 6 –
# கைத்தலம் பிடித்தல்

- மத்தள மேளங்கள் கொட்ட,
- வரியுடைய சங்குகளை ஊத,
- மைத்துனன் முறையுள்ள நம்பியான அந்த மதுசூதனன்,
- முத்து மாலைகள் கட்டித் தொங்க விடப்பட்ட அழகிய பந்தலின் கீழே வந்து நின்று,
- என் கைத்தலத்தைப் பற்றி அருள்வதாக
- நான் கனவு கண்டேன் தோழி!



# பாசுரம் – 7 –
# அக்னி சுற்றுதல்

- வேத உச்சரிப்பில் வல்லவர்களான வேதியர்கள் சிறந்த வேதத் தொடர்களை ஓத, அந்தந்தச் சடங்குகளுக்கு உரிய மந்திரங்களாலே,
- பசுமையான தர்ப்பைகளையும், ஸமித்துகளையும் பரத்தி வைத்து வேள்வி செய்து,
- சினம் கொண்ட மதயானை போன்ற கண்ணன்
- என் கையைப் பிடித்துக் கொண்டு அக்னியை வலம் வருவதை, நான் கனவு கண்டேன் தோழி!



'வாய் நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்
பாசிலை நாணல்படுத்துப் பரிதி வைத்து
காய்சினமா களிறன்னான் என் கைப்பற்றி
தீவலஞ் செய்யக் கனாக்கண்டேன் தோழிநான்'

# பாசுரம் – 8 –
# அம்மி மிதித்தல்

- இந்தப் பிறவிக்கும், மேல் வரும் எல்லாப் பிறவிகளுக்கும் அடைக்கலமான பற்றுக்கோடாக, நமக்கு நாயகத் தலைவனாக உள்ள நம்பியான நாராயணன்,
- தன் செவ்விய திருக்கையால் எனது கால்களைப் பிடித்து
- அம்மியின் மேல் எடுத்து வைப்பதைக்
- கனவினில் கண்டேன் தோழி!



# பாசுரம் – 9 –

# கைமேல் கை வைத்தல்

- வில்லினை ஒத்த புருவமும்,
- ஒளி பொருந்திய முகமும் கொண்ட என் தமையன்மார்கள் வந்து,
- ஹோம குண்டத்தில் நெருப்பை இட்டு வளர்த்து,
- என்னை அதன் முன்னே நிறுத்தி,
- அச்சுதனான அந்தக் கண்ணன் கைமேல்
- என் கையை வைத்து,
- பொரிகளை அள்ளி அக்னியில் சேர்ப்பதைக் கனவினில் கண்டேன் தோழி!

முனைவர் த. டான் ஸ்டோனி



# பாசுரம் – 10 –
# ஊர்வலம் வருதல்

- ஹோமப் புகையின் முன்னே நெடுநேரம் நின்றிருந்ததால் ஏற்பட்ட வெப்பத்தைத்
- தணித்து குளிரூட்டும் வகையில் குளிர்ந்த குங்குமக் குழம்பை உடலில் பூசி,
- சந்தனத்தை நிறையத் தடவி விட்டனர்.
- பின் அங்கிருந்த ஒரு யானையின் மீது நான் கண்ணனுடன் கூடி அமர,
- அலங்காரம் மிகுந்த தெருக்களிலே திருமண ஊர்வலம் வந்து,
- நிறைவாக வாசனை நீரில் மஞ்சன நீராட்டுவதைக் கனவினில் கண்டேன் தோழி!

